வெளியீடு எண் 68.

உ

சிவமயம்.

வளவனூர் - குமாரபுரி

# தோத்திரப் பாமாலை



ஆசிரியர்

மகான் - வண்ணச்சரபம்

அருண்மிகு - தண்டபாணி சுவாமிகள்

திருவாமாத்தூர்.



வெளியீட்டு விழா

29-5-64 வெள்ளிக்கிழமை

திருவாமாத்தூர் கௌமாரசபை வெளியீடு எண் – 68

உ

குருவே துணை.

## வளவனூர் - குமாரபுரி

# தோத்திரப் பாமாலை.

ஆசிரியர்:

*மகான் – வண்ணச்சரபம்*

*திருப்புகழ்ச் சுவாமிகள் – முருகதாச சுவாமிகள்*

என வழங்கும்

**அருண்மிகு. தண்டபாணி சுவாமிகள்,**

**திருவாமாத்தூர்.**



வெளியிடுவோர்:

*திரு. **K. சண்முகம் பிள்ளை,** நிர்வாக அறங்காவலர்.*

*திரு. **S. திருநாவுக்கரசு பிள்ளை,** அறங்காவலர்.*

*திரு. **கி. கோ தண்டபாணி பிள்ளை*** ,,

ஸ்ரீ பாடலீசுவரர் தேவஸ்தானம்,

*குமாரபுரி – வளவனூர்.*

22—5—1964.

## உள்ளுறை.



1. விநாயகர் பதிகம்

2. பாடலீசுவரர் பதிகம்

3. பெரியநாயகி பதிகம்

4. திருக்கூத்துச் சிவன் பதிகம்

5. கந்தநாயக மாலை

6. சண்முகத் திருப்புகழ்

7. சண்முகன் வகுப்பு

8. முருகக் கடவுள் மும்மணிக்கோவை

9. திருமால் பதிகம்

உ
குருவே துணை.

# முன்னுரை.

*மன்னும் குமாரபுரி வாழ்இறைவர் மேலிந்நாள்*
*துன்னும் தமிழ்ப்பனுவல் சூட்டினன்- பன்னுமெழிற்*
*றண்டபா ணிக்குரவன்; சந்ததமும் கற்றுணர்வார்*
*மண்டலத்தில் வாழ்வார் மகிழ்ந்து.*

'*குமாரபுரி தோத்திரப் பாமாலை*' என்னும் இந்நூலுள் வளவனூரை யடுத்துள்ள குமாரபுரியில் திருக்கோயில் கொண்டு விளங்கும் விநாயகர், சிவன், அம்பிகை, அம்பலவாணன், முருகப் பெருமான், திருமால் ஆகிய கடவுளர் மீது பாடப்பெற்ற ஒன்பது வகைத் துதிப்பாடல்கள் அடங்கியுள்ளன. அவற்றுள் முருகன்மீது பாடியதாகவுள்ள நூல்கள் நான்குள்ளன காண்க.

இதனை இயற்றிய ஆசிரியர் மகான்- வண்ணச்சரபம், திருப்புகழ்ச்சுவாமிகள் என வழங்கும் அருள்மிகு *தண்டபாணிசுவாமிகளாவர்*. இவர் சுமார் நூற்றிருபதாண்டுகட்கு முன் திருநெல்வேலியில் தோன்றி இளமைமுதல் வேற்பூசை செய்து ஆறெழுத்தருமறை செபித்து முருகனருளால் தமிழ்க்கவிகள் பல பாடும் தன்மையோடு புலவர் புராணம், தமிழலங்காரம், அருணகிரிநாதர் புராணம், திருவாமாத்தூர் தலபுராணம் போன்ற வரலாற்று நூல்களும், அறுவகை இலக்கணம், வண்ணத்தியல்பு போன்ற இலக்கண நூல்களும், கௌமார முறைமை, பிரணவாநுபூதி, கௌமார தீபம் போன்ற சாத்திர நூல்களும், சமயபேதச்சார்பற்ற வகையில் பழனித் திருவாயிரம், தில்லைத் திருவாயிரம், திருவரங்கத் திருவாயிரம், ஏழாயிரப்பிரபந்தம் போன்ற பல இலக்கிய நூல்களும், குருபர தத்துவம் என்ற தனது சுயசரிதை நூலும் இவை போன்ற பற்பல வகையில் எண்ணிலா நூல்களை அருளியுள்ளனர். மேலும் அவைகளைத் தமது திருக்கரங்கொண்டு பனை ஓலைச்சுவடிகளில் எழுதி வைத்துள்ளனர். (இவை இன்றும் திருவாமாத்தூர் கௌமார மடாலயத்தில் பாதுகாப்பில் உள்ளன.)

தமிழகத்தின் பல இடங்கட்கு மட்டுமின்றி வெளிநாடுகட்கும் சென்று, செல்லுமிடமெங்கணும் சீவகருணைத் திறம் விளங்கத் தொண்டாற்றினர்.

ந.

பெருமைமலி சிவதலமா னாலும் கொல்லும்
பிழையணுகிற் பேய்வசிக்கும் பீட மாமே
(நாளிலேச்சதகம்)

சிற்றுயிர்கட் கொன்றருந்தச் சொன்ன வேதம்
தெய்வமொழி யானாலும் சீவர் நூலே
சற்றுமதா காதென்று ரைப்ப தெந்தச்
சமய நூ லானாலும் தவத்தின் தாயே
(கௌமார முறைமை)

சுத்தபூசை தோய்தருமாகிற் பேயும் தெய்வமாம்
பிணப்பலி ஏற்கில் தெய்வமும் பேயாம்
(சத்திய சூத்திரம்)

கோவதைக்கும் பொல்லார் குடிகேடு காண்பதன்முன்
சாவதற்ற முத்திபதம் தந்தாலும் – மேவற் (கு)
இசையேன்... .. (பழனித்திருவாயிரம்)

என்றெல்லாம் தம் சீவகாருண்யக் கருத்தைத் தாமியற்றிய பல *நூல்*களில் எடுத்து விளக்குவதில் தவறினர் இலர். செல்லுமிடங்களில் உள்ள இறைவன் மீது பற்பல வகையில் தனித்தனி *நூல்*கள் பல செய்தனர். முருகன் திருவருள்துணை கொண்டு பற்பல செயற்கரிய செயல் ஆற்றிப் பலருக்கும் அருட்குருவாகத் திகழ்ந்து பலரை நல்வழிப்படுத்தினர்.

இவர்காலத்தில் வளவனூரில் தங்கித்தவம் புரிந்த *ஸ்ரீ சண்முக சுவாமிகளோடு* தொடர்பு கொண்டு அவர்தம் மடத்தில் பலகாலம் தங்கி அளவளாவினர். அம்மடத்தில் கொலுவிருக்கும் பல தெய்வங்கட்கு *நூல்*கள் பல அருளியதோடு குமாரபுரியில் கோயில் கொண்டுள்ள பல இறைவர்கள் மீதும் *நூல்*கள் பல அருளினர். அவைகளில் ஒரு பகுதியே இந்*நூ*லாகும். தம் அருட்குருவுக்குச் சமமான நிலையில் மதித்துப்போற்றிய ஸ்ரீ சண்முக சுவாமிகள் மீதும் *நூல்*கள் பல பாடினர்.

இவ்வாறு பல நிகழ்ச்சிகளுக்குப் பின் இறுதியில் நடுநாட்டுச் சிவதலங்களிற் சிறந்து விளங்கும் திருவாமாத்தூரில் பத்தாண்டுகள் எல்லைத்தாண்டா விரதமுடன் தங்கித்தவம் புரிந்து 1898ல் ஞான ...தீ கொள்வாராயினர்.

## நூற்குறிப்பு.

1. *விநாயகர்பதிகம்:* 9-வது பாடலில் வீட்டாவலோர் ... ... வதைத்தாய் என்பதால் இன்றும் அதுபோல தீமை விளைவிப்போரை யழித்து நலம்புரிந்தருள்க என்ற குறிப்பை உணரவைக்கிறார்.

2. *பாடலீசுவரர் பதிகம்:* 8-வது பாடலில் வடலூர் அடிகள் இறைவனருள் பெற்று உலகிற் சீவகருணையை நிறுத்தி, திருவருட் சிறப்பை விளக்கத் தவம் புரிந்தார். அப்பேறு கிடைக்கும்பொருட்டு உயிரை அக்கினியில் தியாகம் புரிந்து அருளைப் பெற விரும்பாமல் அருளாணையின்படி அறையிற்றிருமேனியை மறைத்தார். இருப்பி னும் மீண்டு வரச்செய்க என வேண்டுகிறார். இதுபோற் பல இடங் களில் கூறியுள்ளனர். (நூலாசிரியர் சுவாமிகளும், வள்ளலாரும் ஒரு காலத்தவர். பன்முறைப் பழகி அன்புகொண்டவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.)

3. *பெரியநாயகிப் பதிகம்:* 9-வது பாடலில் தேனுந்து சொல்லான் ... ... வந்தாய் என்பது கவிராசபண்டிதர் சௌந்தரிய லகிரி என்ற வடமொழியிலிருந்த அம்பிகைத்துதி நூலைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடினமைக்காக அவர் காசி சென்றபோது அவர் மகள் வடிவில் அம்பிகை சென்று அமுது சமைத்துதவினள் என்ற வரலாறு. மொழிபெயர்த்தமைக்காக அவ்வாறருளிய நீ உன் புக ழையே பாடும் எனக்கருள்வாய் என வேண்டுகிறார்.

4. *திருக்கூத்துச் சிவன் பதிகம்:* சின்னத் துரும்புக்கும் ஊறு செய்யாமல் எல்லாம் இறைவடிவாகக் காணும் ஞான இலக்கணத் தைக் காப்புச் செய்யுளிற் கூறுவது "பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி அப்பனிமலர் எடுக்க மனமும் நண்ணேன்" என்ற பாடலை நினைவு படுத்துதல் காண்க சின்னத்துரும்புக்கும் ஊறுசெய்தல் கூடாது என்பதால் உயிர்வதைப்பார்களை என்னென்று கூறுவது?

மேலும் ஒவ்வொரு பாட்டின் முதற் சொற்களை எண்வரிசையில் அமைத்திருப்பது திருநாவுக்கரசர் விடந்தீர்த்த பதிகத்தை நினைவு படுத்துகின்றது. 6-வது பாட்டில் வலக்கண், சூரியன்; மக்கள் கணபதி, முருகன். மனையாட்டி – பார்வதி; பரி இடமாகிய திருமால் என ஐவருடன் தலைமையான சிவன், ஆகவே சமயங்கள் ஆறும் இறைவனோடு ஒன்றிய தறியாமல் சைவம், வைணவம் ஆதியன வேறென்று வாதமிடுபவரை வெல்வதென்பது ஒருமைப் படுத்த ஆற்றல் உதவுக என்பது கருத்தாகும்.

ப.

*5 கந்தநாயகமாலை:* திருச்செந்தூரில் முன்னாளில் அருச்சகர் வளர்த்த வெள்ளைப் பூனையைக் கோயில் களவு செய்து வைத்த நெய்யை உண்டதெனக்கருதிக் கொன்றனன் வேலையாள். அவர் அதனை அறியாது வருந்தியபோது அவர்மீது ஆவேசமாகி இறந்த அதன்மீது தீர்த்தமும் நீறும் பெய்தெழுப்ப உயிர்பெற்ற வரலாற்றை "பூனையும் உய்ய" என்று குறிப்பிடுகிறார். இதனைக் நூலாசிரியர் குமாரர் ஸ்ரீ செந்தில்நாயக அடிகள் இயற்றிய கௌமார புராணத்தில் அறிக

27-வது பாடலில் அரிய சந்தம் நிறைந்த பாடல்களைக் கேட்ட நின் செவியை, குளறும் என் பாடலையும் கேட்கச் செய்வாயாக. ஏனெனில் தேவேந்திரன் மகளை மணந்திருந்தும் குறமாதிடத்து மோகமுற்று இரந்தவன் நீ என்று காரணம்காட்டிக் கேட்கும் நயம் அறிந்து மகிழ்தற்குரியது.

*6. சண்முகத் திருப்புகழ்:* இப்பகுதி ஆறுவதாக அமைந்தது திருவருட் சிறப்பாகும். 3-வது பாடலில் பொதியாசலத் தலைவரான அகத்தியரைத் தமிழ்ப் பிதா என்றும், அருணகிரிநாதரைக் கிளி வடிவாயிருந்தனர் என்ற கருத்தில் "அம்சுகப் புள்ளாவன்" என்றும் கூறுகிறார் 6-வது பாடலில் சமய அபிமானமற்றவர்கள் வளமொடு வாழாமலும், இரவலர்களைக் கடிந்து வெளியே தள்ளிக் கதவடைக்கும் உலோபர்கள் சிறக்காமலும் இருக்க வேண்டும் என்கிறார். குமாரபுரி என்பது பாடுதற்கு எடுத்துக்கொண்டதா யிருந்தாலும், குமாரக் கடவுள் எழுந்தருளியுள்ள தலம் குமாரபுரி என்று கந்த புராணத்துள் வருவதால் எல்லாத் தலமும்போலல்லாது கயிலைச் சார்பிலுள்ள கந்தகிரியையும்குறிக்கும் என்பது நூலாசிரியர் கருத்து.

*7. சண்முகன் வகுப்பு:* திருமலை என்ற முருகன் தலத்தில் அருள்பெற இவர் ஓர்கால் அம்மலைமீதிருந்துருண்டனர். அக்கால் உடலில் ஓர் ஊனமும், அடையாவாறு காத்துத் "திருவுருவாளன்" என்று ஒரு பெயர் கூறி முருகன் ஆண்டான். அத்திருப் பெயரை இதன் ஈற்றில் அமைத்துப் பாடியதறிக.

*8. முருகன் மும்மணிக்கோவை:* மூன்று வித யாப்புகளால் அமைந்த நூல் இது. ஊர்ச்சிறப்பு, முருகன் திருவருட்பெருமை, தன் அநுபூதி ஆதியன மிக்கிருப்பதையும் எதுகை, மோனை, நடை ஆதியன சிறந்திருப்பதையும் உணர்ந்து மகிழ்தற் குரியதாகும்.

9. *திருமால் பதிகம்:* நீக்கமற நிறைகின்ற பெருமையானவன் திருமால் என்பதை "அன்னியம் ஒன்றில்லாமல் அனைத்திடத்தும் அவிர்வோனே" என்பதாலறியலாம். சடகோபாழ்வார்மீது நூலாசிரியருக்கு பெருவிருப்பிருப்பதை இவர் நூலுட் பல விடங்களிற் கூறக் காணலாம். அம் முறையில் இதிலும் 10-வது பாடலில் கூறுவது சிறப்பாயுள்ளது.

இத்தகைய பல சிறப்புகளும் ஒருங்கமையப்பெற்ற இந்நூலின் அருமை உணர்ந்து குமாரபுரி ஸ்ரீ பாடலீசுவரர் தேவஸ்தான வெளியீடாக இந்நூல் வரவேண்டுமென ஷெ தேவஸ்தான நிர்வாக அறங்காவலர் திரு. K. *சண்முகம் பிள்ளை* அவர்கள் பெரிதும் விரும்பினர். அக்கருத்துக்கேற்ப ஷெ தேவஸ்தான அறங்காவலர்கள் திரு. S. *திருநாவுக்கரசுப் பிள்ளை* அவர்களும், திரு. *கி. கோதண்டபாணிப் பிள்ளை* அவர்களும் ஒத்துழைத்தனர். இம் முயற்சியில் வெளிவரும் இந்நூலைத் தனது நிர்வாக அறங்காவலர் பொறுப்பைத் திரு. K. M. *நடேசப் பிள்ளை* அவர்களிடம் ஒப்படைக்கும் நன்னாளாகிய **29—5—1964**ல் தவத்திலும், புலமையிலும் சிறந்து விளங்கும் பெரியோர்கள் முன்னிலையில் வெளியிடுகிறார்கள் இந் நூலிலுள்ள பாக்களின் எளிமை, இனிமை, பொருட்சிறப்பு முதலியவற்றை நன்குணர்ந்து படிக்க அன்பர்களை வேண்டுவதோடு பதித்த அன்பர்கள் அவர்தம் குடும்பத்தினர் முதலியோர்கட்குப் பல நலமும் அருள எல்லாம்வல்ல முருகப்பெருமானை வேண்டுகிறேன்.

இப்படிக்கு,

**தி. மு. சங்கரலிங்கம்,**
தமிழாசிரியர்,
கௌமாரமடாலயம்.

*திருவாமாத்தூர்.*
விழுப்புரம் P. O.
29—5—64

---

*தனிப்பாடல்.*

ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் குமாரபுரி ஸ்ரீ சண்முக சுவாமிகள் மடாலயத்தில் தங்கியிருந்த காலத்தில், காணவந்த புலவர்களோடு பேசி மகிழவும், தனித்து செபம், தியானம் செய்வதற்கு மன ஒருமைப்பாடின்மை உண்டாக்கியும் இடையூறு செய்யுமளவிற்கு அங்கு செக்கோசை மிக்கிருந்தமை கண்டதும் தமிழ் ஓசை வளரவேண்டுமென்ற அவாவிற் பாடியது.

*சீரார் குமாரபுரிச் செக்கோசை குன்றாதோ?*
*பேரார் தமிழின் பெருக்கோசை மிஞ்சாதோ?*

போற்றும் குமார புரிக்கேகும் புண்ணியர்க்(கு)
ஏற்றபணி செய்யும் இயல்பானைச் – சாற்றுகின்றேன்
வல்ல பெரியோருக்கும் வண்ணப் புலவோர்க்கும்
நல்ல விநாயகபிள் ளை. — ஸ்ரீ தண்டபாணி சுவாமி.

# பதிப்புப் பாயிரம்.

வெண்பா.

சீரார் குமாரபுரிச் செவ்வேள் சிவன், உமை, மால்
காரானை யாதிக் கடவுளர்தம் – பேரால்
திகழுந் துதிப்பாடல் சீர்த்தண்ட பாணி
புகலுமிவை கொள்வார் புகழ்.

குமாரபுரிச் சண்முகப்பேர் கொள்முனிவன் மீது
சமானமிலா அன்பு தழைத்துத் – தமாதரவாற்
பற்பலநா ளங்கு பழகி யிருந்திடுகால்
சொற்பனுவ லாமித் தொகுப்பு.

சென்ற தலந்தோறும் தெய்வத் தமிழ்பாடி
நன்றவையிற் கூறி நலம்விளக்கை – தன்றவமாக்
கொண்டதண்ட பாணிமுனி கூறுதுதிப் பாத்திறத்தை
விண்டளப்பார் யார்புவியின் மீது.

இத்தனை நாளாக ஏட்டி லிருந்தஇநூல்
புத்தகமாய் அச்சிற் பொலிவுற்றுக் – கைத்தலத்தில்
மன்ன அளித்திட்ட மாண்புடையோன் அப்பதியில்
துன்னவரு சண்முகமாம் சொல்.

திறஞ்சேர் குமாரபுரி சேர்திருக்கோ யிற்கண்
அறங்கா வலராய் அமைந்து – மறந்தோயா
வண்ணம் புரந்த வளமையோன் இந்நூலைத்
திண்ண முறப்பதித்தான் சீர்.

பரவுபுகழ்க் கோதண்ட பாணிதிரு நாவுக்
கரசுசண் முகப்பேர் அவிர்ந்து – விரவும்
குமார புரிசிவனூர் கோயிலறம் பூண்டோர்
தமாதரவால் அச்சிடுவித் தார்.

பதித்தோர் வெளியிட்டோர் பத்தியுடன் நாளும்
துதித்தோர்க் கருள்நின் தொடர்பைக் – கதித்தோங்கச்
செய்தருளச் செவ்வேள் திருவடியைப் போற்றியன்பாற்
கைதொழுவேன் என்றும் களித்து.

அன்பன்,
நூலாசிரியர் பெயரர்
இ. செ. முருகதாச ஐயா
கௌமார மடாலயம்.

திருவாமாத்தூர்
விழுப்புரம்
22—5—64

உ
முருகன் துணை



மகான் - வண்ணச்சரபம்

**அருண்மிகு. தண்டபாணி சுவாமிகள்**

தோற்றம் : 28—11—1839.

திருவருட்கலப்பு : 5—7—1898.

கணபதி துணை.



# விநாயகர் பதிகம்.

காப்பு, வெண்பா.

குன்ருத வண்மைக் குமாரபுரிக் குஞ்சரப்பொற்
கன்ருய முக்கட் கணபதியே – மன்ருடி
ஈன்ற மகனே! எனக்கிரங்கி இப்பொழுதே
ஆன்றசித்தி யெல்லாம் அருள்.

நூல்

வெண்டளைக்கலிப்பா.

ஒன்றையன்றி மற்றென்றும் உன்னுத ஓகைபெற்றும்
நன்றை யறியார்பால் நானிரந்து வாடுவனே
மன்றை இடமாக்கும் வள்ளலருள் மாமதலாய்
கொன்றைமரச் சோலைக் குமாரபுரிக் குஞ்சரமே. 1

பற்றகன்ற மேலோர் பலர்க்கும் பணிபுரியும்
அற்றம் வருமா(று) அலமருதல் ஆய்ந்திலேயோ
புற்றரவுங் கொன்றைப் புதுமலரும் பூண்பானே
கொற்றவரும் போற்றும் குமாரபுரிக் குஞ்சரமே. 2

என்றமிழ்ப்பாட் டாசையுனக் கெய்தியவா ஞேர்ந்தபின்னும்
பொன்றருவார் வாயிலிடம் போகாமை யெய்தாதோ
தென்றல்வரைக் கோனைத் திசைதோ றலைத்தாண்டாய்
கொன்றருந்தார் வாழுங் குமாரபுரிக் குஞ்சரமே. 3

செங்கைவிரித் தேற்றலையும் தீயேனைச் சென்னியிற்றண்
கங்கையுளான் போலும் களிபொருந்தச் செய்வாயோ
மங்கையர்க்கோர் கோவாய் மலைத்தலையில் வந்தாள்மென்
கொங்கையமு துண்டாய்! குமாரபுரிக் குஞ்சரமே 4

---

1. ஒன்றையன்றி - உமது திருவுருவைத்தவிர. ஓகை - உவகை, களிப்பு
மன்றை இடம் - கனகசபையை வசிப்பிடமாகப்பெற்ற.
2. அற்றம் - சமயம்
3. கோன் - அகத்தியர். ஆண்டாய் – காவிரி நதிக்காக அகத்தியர் கமண்டலத்தைக் கவிழ்த்து, காகமாயும், சிறுவனுகியும் பின் தானுகவும் காட்டியருளியது.

வேலா வலயநடு மேதினியெல் லாமறிய
மாலாம் அவனேபோல் வாழுநலம் என்றருள்வாய்
ஆலாலம் உண்டார் அடியார் களிகூரும்
கோலா கலஞ்சேர் குமாரபுரிக் குஞ்சரமே. 5

வம்பொன்றும் புன்னூல் மதக்குறும்பர் மாட்டணுகாத்
தெம்பொன்றும் நெஞ்சின் றியக்கறுத்தின் றுண்டருள்வாய்
செம்பொன் தடவரைமேற் செப்புமறை யொன்றெழுதும்
கொம்பொன் றுடையாய்! குமாரபுரிக் குஞ்சரமே. 6

நீறணிவார் வாழும்வண்ணம் நீயுரைக்க நெஞ்சறிந்த
வாறனைத்தும் என்றும் மகிதலத்திற் காண்பேனே
சீறரவத் தால்இருக்கும் செய்யவயிற் றம்மானே!
கூறருஞ்சீர் வாய்ந்த குமாரபுரிக் குஞ்சரமே. 7

பொன்னியொடு தெண்ணீர்ப் பொருநையுமுன் ஈந்தாய்க்கிங்(கு)
என்னிதயத் தின்னலொழித் தின்பநல்கல் ஓர்பெரிதோ
கன்னி ஒருத்தி களிகூரக் கைக்கொண்டாய்!
கொன்னிலங்கு சூழற் குமாரபுரிக் குஞ்சரமே. 8

காட்டார் மகள்இணக்கால் கந்தனுய்யச் செய்தாய்என்
பாட்டாற் சிறிதும் பயனுதவ மாட்டாயோ
வீட்டாவ லார்வருந்த வெந்துயர்செய் தானொருவற்
கோட்டால் வதைத்தாய்! குமாரபுரிக் குஞ்சரமே. 9

தொண்டர் இருவர் துணுக்கமுறத் தூயதமிழ்
விண்டவனை ஆண்டாய் வினையேனை விட்டுவிடேல்
மண்டலத்துள் ளாருமுதல் வந்திக்கும் வான்பொருளே!
கொண்டல் உலவும் குமாரபுரிக் குஞ்சரமே. 10

தில்லை வனத்தான் திருமகனைத் தேன்சொரியும்
குல்லைமலர் போலும் குமாரபுரிக் குஞ்சரத்தை
நெல்லைநகர்ப் பாவலவன் நெஞ்சுவந்து போற்றியவெண்
சொல்லை விழைவார் துயர்சிறிதுந் தோயாரே. 11

---

5. வேலாவலயம் - கடல்.

7. பொன்னி – காவேரி, பொருநை - தாமிரபரணியாறு.

8 இணக்கு - இணங்கச்செய்தல். ஒருவன் - கயமுகாசுரன். கோடு - கொம்பு. காட்டார் - காட்டுவாசமுற்ற வேடமகள் (வள்ளி).

10. இருவர் - சேரமான் – சுந்தரர், கயிலையிற் றும்பிக்கையாற் றூக்கி அவர்கட்கு முன்னே விடுத்ததும், மதுரமொழி நல்லுமையாள் என்ற பாட்டு ஔவை கூறியதும் ஆகிய வரலாறு.

11. தில்லைவனத்தான் - நடராஜர். குல்லை - வெட்சி.

சிவமயம்.



# பாடலீசுவரர் என்ற சிவபிரான் பதிகம்.

காப்பு—வெண்பா

கொங்கார்தண் சோலைக் குமார புரிச்சிவனே
சங்கார் நெடுங்குழைச்சீர்ச் சங்கரா – பைங்கார்
அனையாள் ஒருத்தி அமரும்இடத் தையா
எனையாள வேண்டுமிப்போ தே.

நூல்

அறுசீர்த்தாழிசை

சேல்வளர் கண்ணியர் தம்மயல் கொண்டு தியங்குயவ தற்றடியார்
பால்வதி யும்படி செய்குவ தென்று? பகர்ந்தரு ளற்கிசைவாய்!
போல்வதி லாதுநி றைந்துத தும்பிய பூரண புங்கவனே
கோல்வளை மாதுமை பங்கினில் மேயகு மாரபு ரிச்சிவனே 1

கன்றையெ டுத்துவி ளாமிசை யன்றெறி கைத்திரு மாலெனவே
நன்றைவி ளைத்துல கோர்பர வும்புகழ் நானடையப் புரிவாய்
மன்றைய ரங்கென ஒப்பிந டம்பயில் வண்மைப டைத்தவனே
குன்றைவ ளைத்திக லோர்புர மெய்தகு மாரபு ரிச்சிவனே. 2

பாதகர் செய்கொடு மைத்தொழில் கண்டுப தைக்குமெ னக்குனருள்
போதவும் நல்கிஉ வப்பொடு வாழ்கைபு ரிந்திட வல்லைகொலோ
சீதம திப்பிள(வு) ஆடிட ஆடிய செஞ்சடி லத்திறைவா
கோதகல் சீலம மைந்து குலாவுகு மாரபு ரிச்சிவனே. 3

பற்றகல் சீலரெ னத்திகழ் வேனது பாழ்மன திற்பழிதீர்
நற்றவ யோகியர் பெற்றுள தாகிய நன்மையி லங்குறுமோ
புற்றர வப்பணி யோடுக லந்துபு ரந்தரர் என்பணிவாய்
கொற்றமு டைப்பல வீரர்ப ராவுகு மாரபு ரிச்சிவனே. 4

மோகம டந்தையர் இன்புறு மாறு மொழிந்து பராவியநல்
பாகந யத்தமிழ் மீதும் வெறுப்புறு பான்மையி னாளிலையோ
சாகரர் நல்கிய ஆலம யின்றுயர் சங்கர னேதகைசால்
கோகன கத்தட வாவிகு லாவுகு மாரபு ரிச்சிவனே. 5

மஞ்சவிர் கூந்தல்ம டந்தையொ ருத்தி வருந்துமுன் மாங்கனிதந்(து)
அஞ்சல ளித்தஅ ருட்கடல் உன்னி அயர்ந்தமை ஆய்கிலையோ
வஞ்சர ளப்பரி யாய்விடை மீதொரு மங்கையொ டுந்திரிவாய்
குஞ்சர ஈருரி யாய்வளம் நீடுகு மாரபு ரிச்சிவனே. 6

காதைய னந்தம்வி னாவியென் நெஞ்சு கலங்கிடல் கண்டுளநீ
மாதைம கன்றனெ டுங்கொடு வெள்விடை வைகிமுன் வந்திலையே
சீதையில் வால்வளை முத்துமிழ் செய்யிடை சென்றணி நாறுநடும்
கோதைய ராடல்மி கப்பொலி கின்றகு மாரபு ரிச்சிவனே. 7

அக்கினி யிற்குதி யாமல றைக்குள் அடங்கிய வடலூரான்
திக்கினர் யாவரு மெச்சிட வந்து திகழ்ந்திடு மாறருள்வாய்
இக்கின னைப்பொடி செய்தவ னேசிலை யிற்பெரி யான்எதிரோர்
கொக்கிற குத்தலை வேடுவ னானகு மாரபு ரிச்சிவனே. 8

ஐங்கர னைக்குக வேளை நிகர்த்துன் அருட்பெரு வாழ்வடைவான்
இங்கயர் வேளையி கழ்ந்துவி டாம லெடுத்தரு ளற்கிசைவாய்
பங்கய மங்கைம ணாளன் விரும்பிய பாதமு டைப்பரனே
கொங்கவிழ் கொன்றை வனம்பொலி வானகு மாரபு ரிச்சிவனே 9

முத்தமிழ் பாடிய நால்வர்க ளோடெனை மூவுல கும்புகழச்
சித்தரும் ஞானிக ளும்பெறு மேன்மை திகழ்ந்திட என்றருள்வாய்
பைத்தஅ ராவொடு கூவிள மாதி பரித்த பனிச்சடையாய்
கொத்தலர் சோலை வளம்பொலி கின்றகு மாரபு ரிச்சிவனே. 10

மலைமகள் கேள்வனை மேருவ ரைச்சிலை வானவ னைக்கதிர்சூழ்
கொலைமழு வுஞ்சிறு மானு மணிந்தகு மாரபு ரிச்சிவனைக்
கலைமலி தென்பொதி யைக்கரு கெய்திய கான்முளை பாடியபா
நிலையுணர் மானிடர் இச்சையெ லாமும் நிலத்தினும் எய்துறுமே. 11

*தெய்வமே துணை.*



சிவமயம்.



# பெரியநாயகி பதிகம்.

காப்பு - வெண்பா.

வல்லவைக்கும் குஞ்சரிக்கும் வள்ளிக்கும் மாமியென
நல்ல குமாரபுரி நண்ணிஞய் – அல்லடையும்
கண்டத்தான் வேண்டும் கவின்பெரிய நாயகியே!
அண்டத்தார் போற்றமுன்னின் ருள்.

நூல்

வெண்டளைக் கலிப்பா

உன்னும் கருத்தினுக்குள் உற்றுவிளை யாடுகின்ற
நின்னுண்கண் நோக்கம் நிறையப் பெறுவேனே
பொன்னும் கலைமகளும் போற்றிசைக்கும் பொற்புடையாய்!
மன்னும் குமாரபுரி வாழ்பெரிய நாயகியே! 1

கோடாத நீதி குறையாக் கொடியவர்தம்
கேடா விளங்கும் கிளர்ச்சியெனக் கென்றருள்வாய்!
மாடாள்வார்க் கின்பம் வருவிக்கும் மாமயிலே
வாடாக் குமாரபுரி வாழ்பெரிய நாயகியே! 2

மீன்போலுங் கண்ணர் விரகமெனும் வேலைவிட்டு
நான்போத வாரிதியில் நண்ணும்நாள் எந்நாளோ?
தேன்போல் மொழிபயிலும் செம்பவள வாய்க்குயிலே!
வான்போல் குமாரபுரி வாழ்பெரிய நாயகியே. 3

காழிக் கவுணியனைக் கைக்கொண்ட வண்ணமிந்நாள்
ஆழித் துயர்தீர்த்(து) அடியேனை ஆண்டருள்வாய்
வீழிக் கனிவாய் விடையாற் குணக்கொடுப்பாய்!
வாழிக் குமாரபுரி வாழ்பெரிய நாயகியே 4

நெஞ்சாரக் கண்டுவப்ப நீவிளையாட் டொன்றுசெய்தும்
அஞ்சாத் திருவருட்பே ராண்மையுறக் கொண்டிலனே
நஞ்சார்ந்த நம்பன் நலியாத வாறளித்தாய்!
மஞ்சார் குமாரபுரி வாழ்பெரிய நாயகியே. 5

எவ்வுருவும் நின்னருளே யென்றுணரப் பெற்றபின்னும்
அவ்வும்உவ்வும் மவ்வும் அறியார்க் கயர்வேனோ
செவ்வுருவக் கொம்பே சிவன்சூடும் சேவடியாய்!
வௌவும் குமாரபுரி வாழ்பெரிய நாயகியே. 6

உண்மைத் திருத்தொண்(டு) உஞற்றார்போல் உள்ளுடைந்து
கண்மைக் கொடியோர் கடைத்தலைக்கும் போகவிடேல்
ஒண்மைச் சுடர்விழியாய் ஓங்கார மாநிறைந்தாய்!
வண்மைக் குமாரபுரி வாழ்பெரிய நாயகியே 7

கொங்கார் மலரோன்முற் கூறுழ்ஐவர் போற்றமலர்ச்
சிங்கா தனத்துறும்நின் சேவையெனக் கெய்தாதோ
சங்காழி சூலமுதற் சாற்றுவளல் லாமெடுத்தாய்!
மங்காக் குமாரபுரி வாழ்பெரிய நாயகியே. 8

ஊனுந்தும் வேலாய் ஒருமகன்கை யூடிருந்து
வானும் புவியும்உய்ய வைத்தபுகழ் வாழ்த்திலனோ
தேனுண்ட சொல்லான்பின் சென்றுவந்தாய்! செம்பொனகர்
மானுங் குமாரபுரி வாழ்பெரிய நாயகியே. 9

எல்லாம் ஒருபொருளே யென்றுணர்ந்த சங்கரன்றன்
உல்லாசம் எல்லாம் உனதருளின் மாட்சியன்றோ
நல்லார்க் கரசாகி நாரணன்றன் னோடுதித்தாய்!
வல்லார் குமாரபுரி வாழ்பெரிய நாயகியே. 10

தானக் கரிமுகனைச் சண்முகனைத் தந்தருளி
மானக் குமாரபுரி வாழ்பெரிய நாயகியைத்
தீனர்க் கிரங்கும் திருப்புகழோன் செப்புமிவை
ஈனர்க்(கு) எமனனையார் இன்னமுதிற் கொள்வனவே. 11

*தெய்வமே துணை.*



சிவமயம்.



# திருக்கூத்துச் சிவன் பதிகம்.

காப்பு - வெண்பா.

குருக்கூட்டம் போற்றும் குமார புரியிற்
றிருக்கூத்துச் செய்வானைச் செப்ப – *நருக்கூரோர்
சின்னத் துரும்பினுக்கும் செய்யாத சீரியர்தஞ்
*சொன்னப் பதப்பூத் துணை.

நூல்

எண்சீர் விருத்தம்.

ஒருபொரு ளேஎன வேதத்தின் முடிவில்
உரைக்கின்ற பொருட்கிலக் குள்வடி வானன்
மருமலர்ப் பொகுட்டுறும் இருமட வாரும்
வந்தெனை நீங்கரும் வாழ்வுறப் புரிவாய்!
திருமகள் கேள்வர்பற் பலர்தொழ நின்றாய்!
சிகையுடைப் பிரமர்தம் சிரம்பல பூண்டாய்!
குருமணிக் குன்றுறழ் திருவுரு உடையாய்! .
குமாரபு ரியிற்றிருக் கூத்துச்செய் வானே. 1

இரண்டுரு வாயநின் திருவடிப் பயனே
எவ்வகைச் சித்தியும் முத்தியும் என்பார்
முரண்டவிர் பேரவை நடுவினிற் சென்(று)இம்
மூடனும் இன்புற முன்னவல் லாயோ?
திரண்டமென் மூலைச்சிவ காமிபங் குடையாய்!
செம்பொன்வெற் பேந்திய திருக்கரத்(து) இறைவா!
குரண்டவெண் டூவலும் புனைசடை முடியாய்!
குமாரபு ரியிற்றிருக் கூத்துச்செய் வானே! 2

* நருக்கு ஊறு – முழுவடிவமான ஒன்றை இரண்டுபடுத்தும் செயல்.
* சொர்னம் – சொன்னம் என்றாகியது.

மூவருள் ளாரெனும் மயக்குறு சிறியோர்
முற்றும்நின் வடிவென முன்னுநர் தம்மைச்
சீவர்தம் திரத்தினர் தம்மொடும் கூட்டித்
தினமிகழ் கொடுமைநின் திருவருட் செயலோ?
தேவர்தம் எலும்புடன் இதழியும் புனைவாய்!
சித்தசன் பொடிபடத் திறந்தகண் ணுதலே!
கோவதைப் பார்குடி கெடும்படி செயவே
குமாரபு ரியிற்றிருக் கூத்துச்செய் வானே. 3

நால்வகைப் பயன்களும் நன்குற வேண்டி
நலியும்என் மனவெளி நடுவொர்வெண் மலைபோற்
கால்வளைத் திட்டநின் கோலம்அன் றவிர்ந்தும்
கடைப்படு மனிதரிற் கலந்துழல் வேனோ?
மால்வழி படும்தினத்(து) ஆழியொன்(று) அளித்தாய்!
வஞ்சகத் தகுவரும் வணங்கிட நின்றாய்!
கோல்வளைப் பாவைமுற் றூதுமுன் சென்றாய்!
குமாரபு ரியிற்றிருக் கூத்துச்செய் வானே. 4

அஞ்சணி முகத்தொர்நின் றன்னவைந் தொழிலும்
ஆமெனத் தமிழ்க்கவி ஆயிரம் பகர்ந்தேன்
வஞ்சமின் மனத்தில்அவ் வண்ணமன் றிலங்கும்
வண்மைபொய் யாதின்ப வாழ்வளித் தருள்வாய்!
செஞ்சரண் தூக்கிவெங் காளியைச் செயித்தாய்!
சீதநன் னீரொடு சிறுமதி முடித்தாய்!
குஞ்சரத் துடன்புலி யுரித்தகைச் சிவனே
குமாரபு ரியிற்றிருக் கூத்துச்செய் வானே 5

ஆறடற் சமயமென் றுன்வலக் கண்ணை,
அருமைமக் களை,மனை யாட்டியைப், பரிபை,
வேறமைத் திகன்றுழல் சிறியவர் தம்மை
வென்றுவப் புறும்புகழ் விரைந்தளித் தருள்வாய்!
நீறணி பவளவெற்(பு) அனையபெம் மானே!
நெருப்புடன் உடுக்கையும் நிலவுகை யானே!
கூறருந் திருவருட் கடலின்நல் லமுதே!
குமாரபு ரியிற்றிருக் கூத்துச்செய் வானே. 6

*எழு*தரு மறையுடன் ஆகமம் இகலா
இயல்பெளி துணர்த்தினை, ஏழையொ டவிர்ந்தாய்!
அழுதுரு கிடுமெய்அன்(பு) ஈந்திலை அந்தோ
அளப்பரும் துயரிடை அலமரு கின்றேன்
மழுவொடு மான்அணி தருகரத்(து) எந்தாய்!
மாமலர்ப் பூசைஎன் மனத்துளும் கொண்டாய்!
கொழுவுழும் சால்களிற் பணிலமுத் தெறிக்கும்
குமாரபு ரியிற்றிருக் கூத்துச்செய் வானே. 7

*எட்டு*ரு வாகியொன் றுயினை எனத்தேர்ந்(து)
இசைக்குமென் றனக்குப்பொன் னேனும்நல் கிலையேற்
றிட்டுசொல் கூறிவில் லால்அடித் தாற்கும்
திருவுளம் இரங்கிய சீர்த்திமெய்ப் படுமோ?
பட்டுவத் திரம்புனை தேவர்கண் டொல்கப்
பசும்புலித் தோலொடு பாம்பரைக் கசைத்தாய்!
கொட்டுடன் குழல்களும் யாழுமிக்(கு) ஒலிக்கும்
குமாரபு ரியிற்றிருக் கூத்துச்செய் வானே. 8

*ஒன்பது* பேதமும் நீயெனத் தேறார்
ஒல்குறத் திருவருள் உவகைமிக் கெய்தி
மன்பதை முதற்சொல்பல் உயிர்களும் வாழ்சீர்
மகிதலத் தியற்றிட வரமளித் தாள்வாய்!
தின்பன ஓர்கிலர் தெரிவரி யானே
சிந்துர முகவனைச் சிற்பர வடிவாம்
கொன்படும் வேற்படைக் குமரனைப் பயந்தாய்!
குமாரபு ரியிற்றிருக் கூத்துச்செய் வானே. 9

*பத்து*த்திக் கினும்நிறைந் துள்ளநின் புகழே
பாடியும் திருவருட் பயன்அடை யாமல்
எய்த்துத்தட் டழிவுறும் எனக்கிரங் காயோ?
ஈரிரு வரைப்புரந் திட்டதும் பிழையோ?
முத்துப்பல் லக்கும்,பொற் செங்கலும் வேண்டா
மொழிந்தசொற் பலிப்புறு முறைசெயிற் போதும்
கொத்துப்புன் மாலையும் கொன்றையொ டணிவாய்
குமாரபு ரியிற்றிருக் கூத்துச்செய் வானே. 10

8. மண், நீர், நெருப்பு, காற்று, விண், சந்திரன், சூரியன், உயிர் – இவை எட்டும் இறைவன் வடிவம்.

9 ஐந்து பூதங்கள், சத்தி, சிவம், விந்து, நாதம் – இவை ஒன்பது பேதம்.

10. எட்டுத்திசை, கீழ், மேல் – ஆகப் பத்துத் திக்குகள்.

பதிெனாரு சமயமும் சிவசம யத்தின்
  பருங்கிளை யாகுமெய்ப் பண்புணர்ந் ததனுற்
குதிகொளும் அவரறி சண்முக முனிக்காக்
  குமாரபு ரியிற்றிருக் கூத்துச்செய் வானை
விதிமறை நூல்வழி செயுமகக் கொலையும்
  விலக்கிடத் தவஞ்செயும் வியன்திருப் புகழோன்
அதியுரித் தாற்பகர் பதிகமி துரைப்பார்க்(கு)
  ஆனந்த வாரியின் அமுதமெய் திடுமே. 11

தெய்வமே துணை.



## விநாயகர் வெண்பா.

குருமகிமை நீடும் குமார புரியிற்
றிருவருள் விநாயகனும் செல்வா! – ஒருசிறிதிங்(கு)
என்னை விழிக்கடையால் இப்பொழுதே பார்த்துலகோர்
பொன்னைவிரும் பாமற் புரி.

## அம்பிகை வெண்பா.

போற்றும் குமார புரியின்நட ராயனிடம்
தோற்றும் சிவகாம சுந்தரியே! – கூற்றுறழும்
சங்கைச் சமயத்தோர் தம்மைவெல்லு மா(று)எனக்குன்
கொங்கைப்பால் சற்றே கொடு.

தெய்வமே துணை.



11. அகச்சமயம் ஆறு, புறச்சமயம் ஆறு ஆகப் பன்னிரண்டு. அகச் சமயத்துள் சைவம் ஒன்று ஆனதால் பதினொருசமயம் என்றார்.

முருகன் துணை.



# கந்தநாயக மாலை.

காப்பு - வெண்பா.

சந்தனச் சோலை தழையுங் குமாரபுரிக்
கந்தனுக்கு மாலை கழறுகின்றேன் - சுந்தரப்பொற்
றோகை மயிலும் சுடர்ச்சூட்டு வாரணமும்
வாகைவடி வேலும் வரும்.

நூல்

கட்டளைக் கலித்துறை.

கன்னலின் பாகும் அடுபாலும் கோதில் கனியுமொல்கும்
சொன்னயந் தோன்றத் துதிபாடி யுன்னைத் தொழத்தருவாய்
பன்னகத் தேறி நடமாடுந் தோகைப் பரியில்வரும்
பொன்னம்வெற் பன்ன முருகா! குமார புரிக்கந்தனே. 1

நாதக் கழலணிந் தாடும்நின் றாள்களை நத்திமின்னார்
காதற் பெருக்கந் தவிர்ந்துய்யு மாறு கருணைசெய்வாய்
சூதத் தகுவன் தனைப்போற்று வார்நிணந் துய்த்துமகிழ்
பூதப் படைக்குக வேளே! குமார புரிக்கந்தனே. 2

சுராங்கழல் சூட்டிக் கவுமாரர் தம்மொடு கூட்டிஅப்பால்
நிராஞ்சன நின்மல ஞானநு பூதி நிறைத்தருள்வாய்
கராங்குலி கொண்டு மலரோன்றன் சென்னி கவர்ந்துவக்கும்
புராந்தகன் பெற்ற மகனே! குமார புரிக்கந்தனே. 3

திண்ணிய நெஞ்சத் துடனே யருந்தவம் செய்துலகில்
நண்ணிய வாறு விளையாடு கின்ற நலந்தருவாய்
பெண்ணிய லார்க்கர சென்றிம வான்றரும் பேதைசெய்த
புண்ணிய மான புதல்வா! குமார புரிக்கந்தனே. 4

நிலவோங்குஞ் சென்னிப் பிரான்றனக் கோர்சொல் நிகழ்த்தி
பலவோங்கல் மீதும் விளையாடு கின்ற பழையதெய்வம் [யெண்ணில்
குலவோதப் பாற்கட லின்னமு தென்னக் குலவுதமிழ்ப்
புலவோ ரெல்லாம்வந்து போற்றும் குமார புரிக்கந்தனே. 5

சித்தே முதற்பகர் முப்பாற் குணமும் தழைக்குமொரு
வித்தேயென் றுள்ள பிரணவச் சீரென்று விள்ளுவையோ
முத்தேவர் இந்திரன் செங்கதிர் திங்கள் முதல்விளங்கும்
புத்தேளிர் சேனைத் தலைவா! குமார புரிக்கந்தனே. 6

பார்வேண்டு மாடல் பலகோடி மாயனிற் பண்ணியபின்
நீர்வேணி யானென வானகத் தூடு நிலைக்கவைப்பாய்
ஓர்வேழம் குன்ற முடன்தூள் படவென் றொளிவிளைக்கும்
போர்வேல் அணிந்த வயவா! குமார புரிக்கந்தனே. 7

கண்காட்டு மங்கையர் சொன்மயக் கேறிக் கவலையுற்று
வண்காட்டு மாதவச் சீர்தவிர்ந் தேனையும் வாழ்விப்பையோ
பெண்காட்டும் வாமப் பிரான்பலிக் கோடு பெயர்த்தெடுத்த
புண்காட்டு வானைப் புடைத்தாய்! குமார புரிக்கந்தனே. 8

நன்னெறி சற்றும் உணரார்பின் சென்று நலமுரைக்கும்
என்னெறி நீங்கிநின் ஆறெழுத் தோதும் இயல்புதந்தாள்
பொன்னெறி சென்னிப் புரவலர் தோள்களைப் போதநம்பும்
புன்னெறி யோர்கள் மருவாக் குமார புரிக்கந்தனே. 9

ஆரப் பெரும்பொழிற் றென்பொதி யாசலத் தண்ணலருட்
சாரப் பசுந்தமிழ்ப் பாடும்நல் லோரும் தளர்வதுண்டோ
ஈரப் புதுமலர்ப் புத்தேள்முன் செய்தவத் தின்பநல்கும்
பூரப் பரியினள் போற்றுங் குமார புரிக்கந்தனே. 10

வரந்தரு வாயென்னும் ஆசையி னுல்நெஞ்சில் வந்தபடி
நிரந்தரம் பாடும் தமியேனைக் கைவிடல் நீதிகொல்லோ
அரந்தனைக் குன்றைப் பொடியாகச் செய்யும் அணிவயிரப்
புரந்தரன் பேதை கணவா! குமார புரிக்கந்தனே. 11

கனவேவந் தப்படிச் சொல்லிய நீயென்றன் கண்களிக்க
நனவேவ ராதிந்த நல்குர(வு) ஈந்திடல் ஞாயங்கொலோ
சினவேங்கை யாதிய எல்லாம் நடுங்கச் சிலைவளைக்கும்
புனவேடர் மங்கைக் கிறைவா! குமார புரிக்கந்தனே. 12

கையால்நின் வேற்படைப் பூசை புரிந்து கனிதமிழால்
ஒய்யாரத் தோத்திரம் பற்பல பாடி உளமுருகி
நையாமல் நைந்து தளர்வேன்றன் பால்மிக நண்ணிவந்து
பொய்யாயி ரஞ்சொன்ன தாரோ குமார புரிக்கந்தனே. 13

ஏதக் கடலின் திரைபோலும் மங்கையர் இச்சைமிஞ்சி
வாதப் புலவ ரெனத்திரிந் தாலும்நின் வண்கமல
பாதத் துணையை மறவேன் கண்டாய்என் பரிவறுஞ்சீர்
போதக் கொடுத்தருள் செய்வாய்! குமார புரிக்கந்தனே. 14

வானை நிலத்தை அளந்தானைப் போல மகிழவைத்துத்
தேனை யனைய தமிழ்ப்பாடல் கேட்டுச் சிரமசைப்பாய்
ஆனையைப் போலும் ஒருதொண்டன் வேண்டு மதனிமித்தம்
பூனையு முய்யப் புரிந்தாய் குமார புரிக்கந்தனே. 15

கயலொஞ்சு கண்ணியர் மேல்விர காகிக் கருத்தழிவேன்
வியனென்று செந்தமிழ் சீர்சிறி தோர விடுத்துண்டேல்
இயமன் றனக்கஞ்சி வாடாத மெய்த்தவம் ஈந்தருள்வாய்
புயல்வந் துலாவு மதிளார் குமார புரிக்கந்தனே. 16

சங்கணி காதுடைப் பெம்மானும் செஞ்சொற் றமிழ்முனியும்
பங்க முருது தடுத்தாண்ட நின்புகழ் பாடுமென்னைத்
அங்கசன் றுனும் பொரலாகு மோநல் லறம்புரியும்
புங்கவர் வாழும் நலஞ்சார் குமார புரிக்கந்தனே. 17

திகழேன லூடொரு கோலொடு போய்வந்த சீர்த்தியினை
இகழேன் றனக்கிரங் காதிருந் தாலினி என்னசெய்வேன்
நிகழேத மின்றிய மெய்க்கவு மாரர் நெருங்குதலாற்
புகழே மலிய விளங்கும் குமார புரிக்கந்தனே.. 18

என்னகத் தெண்ணிய வாவினை யாடி யிகபரத்தோர்
இன்னெலெல் லாந்தவிர்த் தாளவல் லாயென் றிறைஞ்சுகின்றேன்
நின்னருள் எவ்வண்ண மோஅறி யேன்புரம் நீறுபடும்
புன்னகை யார்தம் குரவா! குமார புரிக்கந்தனே. 19

செவியார நின்புகழ் கேட்டுரு காத சிதடர்முற்போய்க்
கவியாலுங் கெஞ்சி யிரவாம லென்று கருணைசெய்வாய்
தவியாத மாதவத் தோர்மலர்த் தாட்பசுந் தாதவிரும்
புவியாய மங்கை முகம்நேர் குமார புரிக்கந்தனே. 20

ஆரண நூலின் பயனறி யாமல் அழல்மகத்தில்
சீரண வுந்தகர் கொல்வாரை யாவன் திருத்துவனே
நாரணன் அன்றிமை யார்களி கூர நவின்றபுகழ்ப்
பூரண ஞான முதல்வா! குமார புரிக்கந்தனே. 21

நல்லார் கனியிதழ்த் தேன்சுவை வேண்டி நலியுமிருள்
இல்லார் பெரும்புடை யூடெளி யேனும் இருக்கவைப்பாய்
வல்லார் புகழை மதியா திகழ்ந்து மனமுவக்கும்
பொல்லார் குடிக்கெமன் போல்வாய்! குமார புரிக்கந்தனே. 22

அலிமுத லாவுள முப்பாலு மாய்நின் அன்புகொண்டு
மலியுங் கருணைக் கடலமு தார்ந்து மகிழ்வதென்றோ
புலியுங் கரியும் உரித்தணிந் தாடினன் போலமிகப்
பொலியுந் தவளப் பொடியார் குமார புரிக்கந்தனே. 23

கற்பனைத் தேடிக் கருத்தழி யாதுன் கழல்பரவி
நிற்பவர் தம்மொடும் கூடிக் குலாவும் நெறிவிழைந்தேன்
பற்பல வாறு வருந்தல்நன் றோசெம் பவளமெனும்
பொற்பமை வுற்ற குமரா! குமார புரிக்கந்தனே. 24

கோவைக் கனியிதழ்க் கோதைமுன் னோர்தரம் கூடவந்தாய்
நீவைத்த வாறிருக் கின்றேன் செயலும் நிலையுள்ளதோ
காவைக் கழனியை வாவியை மேடையைக் காதலித்துப்
பூவைப் பெருக்கென்றும் ஆடுங் குமார புரிக்கந்தனே. 25

மழைக்கொப் பெனத்தருங் கைக்கவு மாரர் மகிழ்ச்சிமிகத்
தழைக்கக் கருதும் தமியேற்கும் இன்னல் தரல்முறையோ
உழைக்குப் பிறந்த குறமா திணங்க ஒருபுனத்திற்
புழைக்கைக் களிற்றை அழைத்தாய்! குமார புரிக்கந்தனே. 26

கிளர்சந்த முத்தமிழ்ப் பாடல்பல் லோர்சொலக் கேட்டசெவி
குளறுந் தமியன் மொழிகேட் பதற்கும் கொடுத்திடுவாய்!
வளமிஞ்சு பொன்னகர்ப் பேதையைச் சேர்ந்தும் மறத்திகண்முன்
புளகம் பெருக்க இரந்தாய்! குமார புரிக்கந்தனே. 27

இருசே வடியும் குறித்துனைப் போற்றும் எனைமதனன்
தருசேனைக் கஞ்சித் தவிக்கவிட் டாயிது தக்கபண்போ
குருசேவை யேதவ மென்பார் மகிழ்வுறக் கூவிமற்றோர்ப்
பொருசேவற் கேதனத் தானே! குமார புரிக்கந்தனே. 28

சாந்தமும் நல்ல தவமும் தமிழும் தருமமும்சேர்
மாந்தரைத் தேவர்க் குயர்ந்தோரென் றோதும் வழக்குணர்ந்தும்
பாந்தனை யன்ன மயல்நீங்கி லேன்பொற் பருப்பதம்போற
போந்தக ரேறிய வீரா குமார புரிக்கந்தனே. 29

அகத்திய மாமுனி யாதியர் போலுண் அருளடைந்து
சுகப்பட நாடித் தளரும் செயலுமென் சொந்தங்கலோ
முகக்கம லந்தொறும் முக்கண் பொலியு முருகையனே
புகர்க்களி றூர்ந்த புனிதா! குமார புரிக்கந்தனே. 30

கனல்படுங் கண்ணுடைக் காலனைப் பூங்கணைக் கைம்மதனை
வனச்முற் றேனை மதியாதுன் றுளில் வருவதென்றே
கனகனைக் கீன்ற பிரான்மரு காசெழுங் காவிமலர்ப்
புனல்வள மோங்கும் வயல்சூழ் குமார புரிக்கந்தனே. 31

நற்றவஞ் செய்யு மவர்பால் அனேக நலமிருக்கக்
குற்றமொன் றேதும் கொடியேனைத் தொண்டரிற் கூட்டுவையோ
கற்றடந் தோறும் நடமாடும் செம்பொற் கழற்குமரா
புற்றர வஞ்சும் மயிலா! குமார புரிக்கந்தனே. 32

நாணுமற் றீவினை செய்கின்ற நானும்நின் நல்லருளைக்
காணுமை யெண்ணி வருந்துகின் றேனென்ன காரணமோ
சேணுடர் போற்றும் குகனே மடந்தையர் சிந்தையொடு
பூணுர மொய்த்த புனிதா! குமார புரிக்கந்தனே. 33

பாகினைப் போன்ற மொழியார்க்கும் பொன்னுக்கும் பாரினுக்கும்
ஆகிய இச்சையெல் லாமொருங் குன்னை யடைவதென்றே
ஏகியொர் ஆற்றங் கரைமூங்கி லாகியுள் ஏக்கமுற்ற
போகிதன் துன்பந் தவிர்த்தாய்! குமார புரிக்கந்தனே. 34

காமர் மலியு மயிற்றேகை நீழலிற் கண்டுனது
தாமரைத் தாள்களைச் சூடுதற் காண தவமறியேன்
மாமதம் நீங்கப் புடைத்தும்விற் றுருகன் மார்பிடத்தும்
பூமனை மாலைப் புரந்தாய்! குமரா புரிக்கந்தனே. 35

தரைமாந்த ரூடுழல் வேன்மனத் தூடு தனித்துவந்து
நிரையார்ந்த வாய்கொடு கிள்ளையென் றுய்!அது நிச்சயமேல்
பிரைதோய்ந்த பாலில்நெய் போல்மறை யாது பிறங்குகண்டாய்
புரைதீர்ந்த செல்வம் பெருகுங் குமார புரிக்கந்தனே. 36

— நூற்பயன் —

கொந்தலர் சோலை மலியத் திகழும் குமாரபுரிக்
கந்தனுக்குச் சொன்ன செந்தமிழ் மாலைக் கவிதையென
வந்தவை முப்பதிற் றுறும் கருது மனத்தினருக்(கு)
அந்தமி லானந்த வாரியிற் றேயும் அமுதெய்துமே.

வேலுமயிலுந்துணை.

உ

சண்முகப்பெருமான் துணை



# சண்முகத் திருப்புகழ்.

காப்பு – வெண்பா.

விண்முகிற்றண் மாரி மிகுக்குங் குமாரபுரிச்
சண்முகன்மேற் சந்தத் தமிழ்பாட — வண்மைமலி
தோகைப் பரியும் சுடர்வேலும் குக்குடப்புள்
வாகைப் பதாகையுங்கா வல்.

நூல்

*தத்ததான தனதன – தனதான*

சத்திவேலை யநுதினம் மெச்சிவாழு மவரொடு
தக்கவாறு பழகிடும்–உயர்வாலே
சத்தசாக ரமும்நிலை கெட்டுமோத முகியெதிர்
சற்பமீது நடமிடு – மயில்மீதே
அத்திமாதும் அடன்மிகும் வெற்றிவேடர் சிறுமியும்
அச்சமாறி அருகுற – நினைவார்தாம்
அக்குமாலை யுடன்உடல் முற்றும்நீறு புனைநலம்
அற்பமாகு மெனுமொழி – பகர்வாரோ
பத்திமீறி வழிபடல் முத்தியாகு மெனும்நெறி
பற்றிநாடும் அடியவர் – குருநாதா
பச்சைமேனி உமையவள் பெற்றபால னெனுமவர்
பட்சமாயும் இலகிய – புகலோனே
நத்திடாத புலவன்முன் முட்டையாகி அருள்செயும்
நட்பைநாடி உருகிட – விடுவோனே
நக்கன்மாயன் மலரவன் ஒத்ததேவர் பலர்வரும்
நற்குமார புரிவளர் – பெருமாளே. 1

*தனதந்த தானதனதன — தனதான*

வதனங்கள் ஆறும்உயர்குறு, நகையுங்கெ டாதமலையென
வளர்கின்ற தோளின்வரிசையும் – மறைமீதே
மலருஞ்ச ரோருகமதென, மிளிர்கின்ற தாள்களொடுகொடு
மயிலின்க லாபநிழலிடை – யிருமானுர்

மிதமிஞ்சி டாதசமரச நயபுஞ்ச மானமொழிசொலி
விழிகொண்டு நாடஒருதரம் - வருவாயேல்
வெறிகொண்டு வேழம்நிகர்பல, சமயங்கள் தோறுமுனதருள்
விரவுங்கு ஞலமதையுல(கு) - அறியாதோ
கதமொன்று சூரரளவிலர் புரியுங் குரூரமறவலை
கடலுங் கலோலமுறவிடும் - வடிவேலா
கறைதங்கு மூவிலையும்எரி மழுவுங்கொள் ஈசனனையவர்
கருதுஞ்சொல் ஓதுமழகிய - முருகோனே
மதனன்றன் மாமிமகனென எறிகின்ற பூவில்மகிழ்வுடன்
வளமுந்தும் வேள்விமலையரு - கணேவோனே
மதுரங்கு லாவுகவிமழை பொழிதுங்க மேகமனையவர்
மருவுங்கு மாரபுரியுறை - பெருமாளே. 2

*தந்ததத்த தானதனத் — தனதான*

அந்தரத்து வானவரைக் கெஞ்சிவெட்கி டாதுதவத்(து)
அன்புவைத்துன் ஆறுதிருப் - பொறியோலே
அண்டமுற்றும் நிநிறைதற் கண்டுசுத்த ஞானம்விளைத்(து)
அஞ்சுகப்புள் ஆனவனைப் – பழியாதார்
தந்தமக்கு ளேபழகிக் குன்றிடத்தெ லாம்உறுபொற்
றண்டையிட்ட தாள்மலரைத் - துதியேனே
சந்தனப்ப ராரைமரப் பொங்கருற்று நீள்பொதியைத்
தண்டமிழ்ப்பி தாவொடுரைத் - ததுதாராய்
கந்தரத்தை நேரவுணக் கும்பலற்று வானவர்துக்
கங்கெடப்பொன் வேலையெடுத் – தெறிவோனே
கஞ்சமுற்ற வேதனழச் சுந்தரப்பெண் வாணிகலக்
கங்கொளச்செய் தாளுமுழுப் – புலவோனே
தந்ததத்த தானதனத் திந்திமித்தெய் தாவெனநித்
தஞ்சபைக்கு ளாடுமவர்க் - கினியோனே
சந்திரர்க்கு நாணமிகத் துங்கமுத்தம் ஈனுமணிச்
சங்குடைக்கு மாரபுரிப் – பெருமாளே. 3

*தந்தன தானதன தானதந்த — தனதான*

துன்பமெ லாமும்வடி வாயமைந்த
தென்றுசொ லுலுமிசை வாகுமென்று
தொண்டரெ லோருமிகழ் தீமைகொண்ட - மடமானுர்
சுந்தரம் நாடியிரு தாள்பணிந்து
கெஞ்சிய வாவுமவர் நீர்மைகண்டு
தும்பியை நேருமுலை யால்மெலிந்து - மடியாதே
உன்பத வாரிசம தேமெயென்ற
வென்றிவி டாதகவு மாரநண்பர்
உய்ந்தது போலஎளி யேனுமிங்கு - மகிழ்வேனே
ஒண்டொடி யார்களிரு பேர்மருங்கில்
அன்பொடு வாழமுனி வோர்நெருங்க
உம்பர்கள் பாடமயி லேறியின்று - வருவாயே
என்பணி வார்இமய மாதுபங்கர்
சங்கணி காதுடைய நாதர்கொன்றை
இண்டைகு லாவுமுடி யீசர்தந்த - புதல்வோனே
இந்திரன் ஊரழுது வாடிநொந்து
புண்பட, நீடுமடல் மாவும்வண்டர்
என்றுள தானவரும் நீறவென்ற - வடிவேலா
இன்பவி னோதவிலை யாடல்கொண்டும்
அன்றொரு பேய்முலையின் ஆலமுண்டும்
எஞ்சலில் வீறுபெறு மால்விரும்பு - மருகோனே
எண்கண ஞதியவர் தாழும்வந்து
கும்பிட நீடுமொரு கோவிலின்கண்
எங்கள்கு மாரபுரி வாழவந்த - பெருமாளே. 4

*தனத்த தானதனதன — தனதான*

பருத்து நீடுமுலையினர் உதட்டில் ஊறல்நுகர்பவர்
பழக்க மானவினைசிறி - தணுகாதே
பறித்த காயமுறுதலை யுடைப்பொ லார்சொல்விதிமுறை
படித்த தீயர்கவிகளை - மதியாதே
தெருக்கள் தோறும்மனைதொறும் உளுக்கி லாதமனமொடு
சிரித்து லாவியிழிபொருள் - கவராதே
சினத்த சேவலெழுதிய கொடிக்கு மேன்மைபகர்பவர்
திருத்தி யாகஅநுதின - முயல்வேனே

மருக்கு ராவும்விரவிய கடப்ப மாலைமணமிக
மணத்த தோளிலொருகிளி - புனைவோனே
வளர்த்த தாயர்அறுவர்கள் கொடுத்த பாலும்உமைமுலை
வடித்த பாலும்நுகர்சிறு - கனிவாயா
இருக்கு மூலம்அறிகிலன் ஒருத்தன் ஆவிமறுகிட
இடித்து மேருவிடைதனை - யிடும்வீரா
இமைப்பி லாரும்முனிவரும் நெருக்க மாகிவழிபட
எழிற்கு மாரபுரிவரு - பெருமாளே. 5

*தய்யத்த தானதனத் தானதந்த – தனதான*

சைவத்தின் மீதுவெறுப் பானவஞ்சர் – உயராதே
தள்ளிக்க பாடமடைப் பார்கள்செம்பொன் – மலியாதே
பொய்வைத்த ஞானமிகப் பேசும்வம்பர் – களியாதே
புள்ளிக்க லாபமயிற் சீர்துலங்க – வருவாயே
நெய்விட்ட நீபமலர்த் தாரணிந்த – புயவேளே
நெல்லைக்குள் ஓர்மொழிஅப் போதுவிண்ட – குருநாதா
தெய்வச்ச மூகமெனக் கூறநின்ற – முருகோனே
செல்வக்கு மாரபுரிக் காவல்கொண்ட – பெருமாளே. 6

———x———

**நூற்பயன்**

**வெண்பா.**

**பண்முதிருந் தொன்னூல் பகருங் குமாரபுரிச்**
**சண்முகத் திருப்புகழைச் சாற்றுவார் - கண்முன்**
**வடிவேலுந் தோகை மயிலும்வரக் கண்டு**
**படிமீது வாரார்அப் பால்.**

**தெய்வமே துணை.**



# சண்முகன் வகுப்பு.

*தனதன தானதனத் தனதன தானதனத்*
*தனதன தானதனத் - தன்னனதான*

அழகிய தோகைமயிற் பரிமிசை யேறிநிதத்(து)
அடியவர் பால்வருநற் - றன்மைவிடாதான்
அருள்மரு வார்தமருக் கெமனனே யார்கள்மனத்(து)
அமைவுறும் ஆசையினிற் - றுன்னியதாளான்
அகிலமெ லாம்அளவத் தகுநெடு மாயவனுக்(கு)
அடல்மலி ஆழிவரப் - பண்ணியசீரோன்
அமரரெ லாமருளச் சபைநடு வாடுமவர்க்(கு)
அருமறை மூலமதைச் - சொன்மலர்வாயான்

எழுதரும் வேதமுதற் பகர்தரும் நான்முகனுக்(கு)
இடிநிக ராகும்அடற் - பன்னிருதோளான்
இமையவர் யாவருமிக் கலமரு சோகம்ஒழித்(து)
இனியமெய் வாழ்வடையச் - செய்ம்முனைவேலான்
எறிகடல் நீர்நடுவிற் குடிகொள்நி சாசரருக்(கு)
இகலென ஓதுமொழிக் - குள்மகிழ்வாவோன்
எனைநிகர் தீயவர்சொற் கவியினும் ஆசைமிகுத்(து)
இயைதர வேமுயல்கைத் - தண்ணருள்ஓவான்

உழைதரு பாவையினைப் பரவிய சீலமெடுத்(து)
உரைசெயும் நாவலருக்(கு) - இன்னுயிர்போல்வான்
உடுபதி போலுமெழிற் பெறுமத வேழம்வளர்த்(து)
உதவிய நாரிமயக் - கின்முழுகாதான்
உரகவு லாதிபர்மிக் கலையந காயுதம்வைத்(து)
உழும்ஒரு சேவலுறக் - கொண்முருகோன்மான்
உறழ்விழி மாதர்தமக் கரசென வேய்இமயத்(து)
உதயம தாமவள்கைக் - கண்மருவோர்சேய்

கழிமத நீரருவித் தனிமலை நேருமஉடற்
கணபதி மீதுமஎதிர்த்(து) - இன்னல்செய்தான்;ஓர்
கவிஞன்அ நாள்மறுகித் துதிசெயும் வேளையினிற்
கனமலை யோடலகைப் - பெண்அடுவான்நூல்
கழறிய வாறுநினைத் துளமெலி யாதுமுழுக்
கருணையின் மூழ்குதவர்க்(கு) - அண்ணியன்வான்மேய்
கழைவன மாநகரித் திருவுரு வாளன்மிகக்
கருதுகு மாரபுரிச் - சண்முகவேளே.

*தெய்வமே துணை.*

முருகக்கடவுள் துணை.



# முருகக்கடவுள் மும்மணிக்கோவை.

காப்பு – வெண்பா.

செம்மணிக்குன் றன்னகுகன் சேருங் குமாரபுரி
மும்மணிக் கோவை மொழிவதற்குக் – கைம்மணிஒப்(பு)
ஆனமுலைப் §பார்ப்பதியாம் அங்கைவடி வேலும்அன்ன
கானமயில் வாகனமும் காப்பு.

நூல்

*நிலைமண்டில ஆசிரியப்பா.*

கார்முகில் பொதிந்து கரியமா லென்னச்
சீர்மிகத் தருபல சிகரி தோறும்
‡கொடிநடம் பயின்று குமார புரியில்
அடியவர் வாழ்வான் அவைமுழு தொல்க
வந்தினி தமர்ந்தென் மனங்கவர்ந் தொருமை
தந்தியற் பனுவல் தருகென இரந்தும்
இசைவுரு மாற்றம் இயம்பச் செய்தும்
நசைமிகை படவே நவிலுமா றசைத்தும்
உலகினர்க் குரைக்கில் ஒய்யென †நகற்காம்
பலவிளை யாடல் பயின்றும்வாழ் குகனே!
எவ்வகைத் துயர்ஈண் டெய்தச் செயினும்
*பௌவநீர்ப் புவியோர் பைம்பொன் வேட்கை
ஒன்றும்வந் தென்னிடத் தொன்று(து)
இன்றுதொட் டின்னே இயற்றுதி யினிதே.

வெண்பா.

இனிய கடலைபய(று) எள்ளுண்டை பற்பல்
கனியனைய கொள்ளுங் களிறு – நனிவிரும்பும்
கோலத் துணைவா! குமாரபுரிக் கோமானே!
காலத்துக் கஞ்சாமற் கா.

---

§ உமையவள் வேலாயுதமாயும், மயில்போன்ற சாயலாயும் உள்ள செய்தி.

*இதனை அகவற்பா எனச்சொல்வர். ஈற்றடிக்கு முன்னடி மூன்றுசீரில் வருவதை நிலைமண்டிலமென ஆசிரிய சுவாமிகள் வழங்குகிறார். நிலையாக முடியும்போது மண்டலித்தல் (முடங்குதல், வளைதல்) பற்றிய குறிப்பு காரணம் என்க.

‡ கொடிநடம் - முருகன் ஆடல். † நகல் - இகழ்ச்சி. * பௌவநீர் - கடல்நீர்

### கட்டளைக்கலித்துறை.

காகாவென் றெத்தனை நாளிரந் தேனெனைக் காண்கிலைகொல்?
போகாந்த காரத்தை நாடாத வண்ணம் புரந்திலையே
ஆகாத பிள்ளையென் றல்அந்த ஞாயம் அறைகுவையோ
வாகார் குமார புரிக்கோயி லூடென்றும் வாழ்கந்தனே. 3

### நிலைமண்டில ஆசிரியப்பா.

கந்தனென் றொருவன் வைவே லேந்திக்
கொந்தலர் சோலைக் குமார புரியில்
தன்னடி யவர்பாற் றறுகண் செய்வார்க்(கு)
இன்னலும் ஏனையர்க்(கு) இன்பமும் நல்கி
வாழ்ந்துளான் என்னும் மாற்றம் வினவித்
தாழ்ந்துபோற் றிசைத்துச் சண்முக மலரும்
பவளவெற் பினமங்கர் பன்னிரு தோளும்
தவளநீ றணிவார் தலைமணங் கமழும்
பங்கயத் துணைப்பூம் பதங்களும் கருதிச்
சங்கரன் திருமால் சதுமுகன் முதலோர்
தமையெலாம் இகழ்ந்து சாற்றரும் பேதம்
அமைதரு சமயத் தவரொடும் பிணங்கி
இருந்தவென் பால்அவண் எய்தி எய்தித்
திருந்துபே ரறிவாத் திகழ்தரு தன்னை
அன்றிமற் றின்றென அதட்டி
என்றிறன் றனையும் ஏற்றிலங் கினனே. 4

### வெண்பா

ஏற்றுப் பரியாற்(கு) இசைத்ததனை என்செவியிற்
சாற்றுகெனக் கேட்கை தகாததோ – கூற்றுமட்டும்
வாராக் குமாரபுரி வாழ்குகனே வண்டமிழ்கொண்(டு)
ஏரார் கிளிக்குரைத்தா யே. 5

### கட்டளைக்கலித்துறை

தாயார் முதற்பகர் நால்வகைச் சார்புந் தமிழ்விரும்போர்
சேயாய்த் திகழ்ந்த(து) அதன்சீர் உரைக்கிற் செழுங்கமல
மேயானைக் குட்டித் திருமாலைக் காத்தரன் வேண்டுபொருள்
வாயாரச் சொல்லிக் குமார புரியின் வயினுற்றதே. 6

*நிலைமண்டில ஆசிரியப்பா.*

உற்றவ ரென்ன உலகினர்க் கருதிப்
பற்றகல் பெரியோர் படிவங் காட்டிப்
பொன்மயல் பெருக்கிப் புலருந் தமியேன்
நன்மனத் தொண்டர் நனந்தலை வைகி
எவ்வகைப் பேறும் இனிதுபெற் றமைந்து
பௌவநீர் புரையும் பகைப்பெருக் கொழித்துன்
தண்டையங் கமலத் தாளிடை புகற்காம்
பண்டை மாதவப் பயனிலேன் எனினும்
காப்பதுன் கடன்;நிற் §கான்முளை யென்ன
‡மோப்பவள் இளமென் முலைநலம் புணர்வான்
*கடம்பமால் வனத்தோர் †கானவ ணாகித்
திடம்பெறப் புரந்த ||தீயனிற் கடையேன்
அல்லன்யான் அறிதி! அதன்பயன் சிறிதுள
கொல்லலின் முயலார் குமார புரியில்
வன்னமா யிரம்பெறும் மயின்மேல்
மின்னகும் வேலொடு விளங்குதே சிகனே. 7

**வெண்பா**

தேசிகனை வேலெடுத்த சேவகனைச் செம்பவளப்
பாசியணி வாட்கினிய பான்மையனை – ஆசில்
குமாரபுரிக் கோயிற் குகவேளை யன்றி
எமாதுளத்தில் மற்றொன் றிலை. 8

*கட்டளைக்கலித்துறை*

இலையார்ந்த வெண்பொடி நல்கியன் றென்னொ டியம்பியசொல்
நிலையாமென் றெண்ணி யிறுமாந் துளேனை நிலத்தினரும்
விலையாரும் புன்பொருள் வேண்டவிட் டாயிதொர் வேடிக்கையோ
தலையாய செல்வக் குமார புரியிற் சரவணனே. 9

*நிலைமண்டில ஆசிரியப்பா.*

†சரவுயிர்க் கொலைக்கும் சற்றும் அஞ்சா
அரவுறம் பொல்லார் அளவில் பல்லோர்
வாழ்வுறும் இந்நாள் மகிதலத் தென்னைத்
தாழ்வுறப் படுத்தல் தருமந் தானோ
என்னகம் *கரியா இனிது தோன்றி

---

7. § கான்முளை - சேய் ‡மோப்பவள் - முகப்பவள்(உமை) *கடம்பமால்வனம்– மதுரை. † கானவன் - வேடனாகச் சொக்கலிங்கப்பெருமான் கொண்ட வடிவு || தீயன்-மாபாதகம்தீர்த்த படலத்து வரும் கொடியவன்.

முன்னவின் றுளவா முடித்தருள் புரிவாய்
கோதகல் வளங்தோய் குமார புரியில்
சீதரன் முதலோர் தெண்டனிட் டேத்தச்
செந்துவர்க் கிரியெனத் திகழ்ந்து
முந்துமெய்ஞ் ஞான மொழிபகர் குகனே 10

வெண்பா.

குகனைக் குமாரபுரிக் கொற்றவனை யீசன்
மகனைத் தினங்கருதி வாழ்வோர் - புகழும்
§இருநாலு சித்தியுமுற் றெய்துமுத்தி வேண்டித்
தருநாட்டை யெள்ளுமவர் தாம். 11

கட்டளைக்கலித்துறை.

§தாமக் கருங்குழ லார்மையல் நோயிற் றவிக்குமென்னைச்
சேமப் படச்செய்ய வல்லாயன் றேவென்றன் சிந்தையுட்பல்
†யாமத்தும் சொன்னசொல் லெல்லாம்பொய் யோசெந்திலேயனைய
காமர்க் குமார புரியாளும் வேற்படைக் கைத்தெய்வமே. 12

நிலைமண்டில ஆசிரியப்பா.

தெய்வத் திருமொழிச் செழுந்தமிழ்ப் புலவோர்
செய்வகை யாவும் திரைநீர்ப் புவியோர்
பற்பல வாறு பகரக் கேட்டென்
அற்ப நெஞ்சம் §அலமர லறிந்தும்
அத்திற லொருசற் றருளிலை யந்தோ
சத்திவேற் படையொடு தமியே னிடைவந்(து)
என்னைநின் †கிளியென் றிசைத்த மாற்றம்
தன்னையிவ் வுலகோர் தாமும் அறியச்
செய்யுநாள் நினைத்துத் தியங்கவும் கண்டாய்!
பெய்யும்°வால் வளையார் *பிரமையும் ஓர்பால்
வந்துறச் செய்தாய்! மறுதுணை அறியேன்
‡சிந்துரம் உலவுந் தெருநலம் குலவும்
பொற்புறு குமார புரியிற்
||சிற்பர மாகித் திகழ்ந்தசண் முகனே. 13

---

10 † சரவுயிர்-நடப்பதும் பறப்பதும், ஊர்வதும், நீர்வாழ்வதுமாகவுள்ள உயிர் வகை. *கரியா-சாட்சியாக(இந்திரனே சாலும்கரி) 11. § இருநாலுசித்தி – அட்டமாசித்திகள் 12 § தாம மலரையணிந்த; † யாமத்தும்-இரவுநேரத்தில்
13 § அலமரல்-வருந்துதல்; † கிளி-அருணகிரிநாதராகிய கிளியாக முற்பிறவியிலிருந்த செய்தி; °வால்வளையார் - வெள்ளையான சங்கை யணிந்த மாதர். *பிரமை-மயக்கம். ‡ சிந்துரம்-யானை || சிற்பரம்-ஞானமயம்.

வெண்பா.

§முகமனன்றென் வார்த்தைதயென்னை முற்றும் கவர்ந்தாய்
சகலமுநீ யென்றுணரத் தாராய் – இகதலமும்
வானும் பரவும் வளஞ்சேர் குமாரபுரி
மானும் புகழ்வேல வா. 14

கட்டளைக்கலித்துறை.

வேலரியு தப்பெரும் பூசையின் ஆசை மிகுக்குமென்னை
மாலாதி யோர்புக ழத்தகும் நாளும் வருவித்திடாய்
சேலார்கட் குஞ்சரி பாகா புனத்துச் சிறுமிகொண்கா
கோலாக லாநம் குமார புரியிற் குருபரனே. 15

நிலைமண்டில ஆசிரியப்பா.

குருவென வுலகிற் குலவல் எலாம்நின்
திருவுரு வென்னத் தெளிதரப் பெற்றும்
புலைநெறிக் கொடியோர் புன்மை நாடி
மலைவுறும் கொடுமை மாற்றி யருளாய்
தண்புனற் *பணையிற் றயங்கும் வானை
விண்புகின் உரிஞ்சி விரிபூ வுதிர்தரு
கொன்பொழில் உடுக்கும் குமார புரியில்
நம்புநர் வேண்டுவ நல்கி
அம்புவி புரக்கும் அயிற்கைவா னவனே. 16

வெண்பா

†வானவர்தம் வாழ்க்கையையும் வம்பென் றுருவருக்கும்
ஞானமுறப் பெற்றபின்னும் நானிலத்து – மானனையார்
பார்வைக் குருகப் படுமோ குமாரபுரி
ஊர்வைகும் வேலா உரை. 17

கட்டளைக்கலித்துறை

§உரையிறந் துற்றமெய்ஞ் ஞானநு பூதி யுடையவர்தாம்
தரையினிற் கூடும்நன் னுள்வர வேண்டித் தவிக்குமென்னைக்
கரைதவிர் மாயைக் கடலூ டமிழ்ந்து கலங்கவிடேல்
புரையில்வல் லோர்மிகப் போற்றுங் குமார புரிக்குகனே. 18

14. §முகமன் – உபசாரம். 16. எந்தச் சமயத்தவரும் குருவென்று கொள்ளத் தக்கவர் யாரும் முருகன் அருளுடையவரே என்றுணரும் நிலை கௌமார குக்குரியது *பணை-வயல். 17. †வானவர்...வம்பு 'வானேயும் பெறில் வேண்டேன்' எனத் திருவாசகம் கூறும் கருத்து. 18. § உரையிறந்த – சும்மாயிரு சொல்லற, என்ற கந்தரநுபூதிக் கருத்து மௌன அநுபவம் பெற்ற அதீத நிலை.

### நிலைமண்டில ஆசிரியப்பா.

புரிமருப்(பு) ஆட்டின் புறத்தில் ஏறி
எரிவளர்த் தோம்பும் இகத்துமா தவரும்
வானகத் திமையா வாழ்க்கை யோரும்
மானமற் றழியா வண்ணம் காத்த
பெரும்புகழ் கருதிப் பிறங்கொளி மதுரம்
விரும்புமெய் புணர்ந்த வியன்றமிழ்க் கவியால்
போற்று மென்னைப் புறம்பெனத் தள்ளா(து)
*ஏற்று வாகனத்(து) இறைவனு தியர்க்(கு)
அன்றளித் தருள்பே றமைக்க வேண்டும்
குன்றலில் வளமைக் குமார புரியில்
எவ்வெவர் எவ்வா றெண்ணினும் இகழா(து)
அவ்வவர்க் கவ்வா றவிர்தரும் அருள்கொண்(டு)
இருமயி லன்னார்க்(கு) இடையில்
ஒருமயிற் பரிமீ தொளிர்உர வோனே. 19

### வெண்பா.

உரங்கொண்ட வேலானை ஒண்மழுவான் வேண்டும்
சிரங்கொண் டுதவுமொரு சேயைக் – கரங்கொண்டு
கும்பிடுவோர்க் கிந்தக் குமாரபுரி போலமுற்றும்
நம்பிடும்ஊர் இல்லைசொன்னேன் நான். 20

### கட்டளைக்கலித்துறை.

நானென்ற ஆணவப் பேய்வந் துறுக்க நலியுமென்னைத்
தானென்ற நன்னிலைக் கென்றமைப் பாய்அருட் சண்முகத்தோர்
கோனென் றறிகிலர் தம்மையுங் காத்துக் குமாரபுரி
§வானென்ற வாழ்வுறச் செய்யுமெங் தாய்மயில் வாகனனே. 21

### நிலைமண்டில ஆசிரியப்பா.

‡கனக மாலறக் கழுவி அப்பால்
அனநின் திருவாய் அறைந்த வாறு
மூவுல குணர முயன்றிடும கிணற்றில்
ஓவுரு நதியொன் றொளிர்தரக் காட்டி

---

19. பூமியிலும் வானகத்தும் உள்ளோரது பெருமைக்கு இழுக்குவராவாறு, 'ஆட்டின்மீதேறிக் காத்தாய்' என்று அன்வயப்படுத்துக. *ஏற்றுவாகனத்து இறைவர் – இடபவாகனத்தையுடைய பரமன். 21. §வான்என்ற – தேவருலகுக்கு ஒப்பான, தன்பெருமை அறியாரையும் வாழ்விப்பவன் முருகன்.

மீனுறழ் கண்ணுர் வேட்கை முதலாய்
யானுளத் தமைக்கும் யாவும் நீத்துன்
திருவடி யதனிற் சேர்தரக் கொண்டு
வருபிறப் பொன்றும் மருவா தருள்வாய்
சத்தி வேற்கைச் சரவணன் ருனே
முத்தி முதலெனும் முனிவோர் குறிக்கும்
சமய நெறியின் தலைப்பெயர் வாய்ந்து
†கமலை மனையுறழ் கவினெடு பொலிந்து
புகழ்பெறுங் குமார புரியில்
நிகரில்வேல் பிடித்து நின்றசே வகனே. 22

**வெண்பா**

§சேவேறு வார்க்கினிய தேசிகனைச் செங்கமலப்
†பூவேறு வானைப் புடைத்தானைப் - பாவேறும்
செல்வக் குமாரபுரிச் சேந்தனைப்போற் ருப்புலவோர்
சொல்*வக் கணைநம் துயர் 23

***கட்டளைக்கலித்துறை***

§நந்தமர் செங்கைத் திருமால் மருகன் ‡நறைக்கடப்பங்
கொந்தலர் மாலை கொடுத்தாலென் பேதையைக் கோரநமன்
வந்தனம் செய்குவன்; நிந்தைவிட் டேத்தி வணங்கும்; மரப்
பொந்தமர் கிள்ளை பயிலுங் குமார புரிமுற்றுமே. 24

***நிலைமண்டில ஆசிரியப்பா.***

முற்றும்நின் செயலென மொழிதரு மென்னை
§எற்றும் தொழிலும், என்வாய்ச் சொற்கள்
†காமுறு நலமும் கருதிநன் குணரின்
||மாமுதல் தடிந்து †மகபதி முதலோர்
தம்மைமுன் புரந்த தனிப்புகழ் மறந்து
‡வெம்மையார் காட்டில் வியனுருப் பொலிபேய்க்

---

22. ‡கனகமால் - பொருள் ஆசை, இந்நூலாசிரியர் கிணறு ஒன்று திருநெல் வேலியில் நந்தவனத்துக்காக வெட்டினர். திருவருட்சோதனையால் நீர்வராது மிகவருந்தினர் என்பது வரலாறு †கமலைமனை - இலக்குமியின் வீடாகிய செந்தாமரை மலர். 23. §சேஏறுவார் - இடபத்தைவாகனமாகப்பெற்றபரமன் †பூ ஏறுவான் - பிரமன். *வக்கணை – வர்ணனை. 24. §நந்துஅமர் - சங்கை யணிந்துள்ள விஷ்ணு. ‡நறை - தேன். (நமன் வந்தனம் செய்குவன், குமாரபுரி முற்றும் நிந்தைவிட்டு ஏத்திவணங்கும் எனக் கொள்க.
25. §எற்றும்—ஏமாற்றுகின்ற †காமுறுதல்—விரும்புதல் ||மாமுதல்—சூரனாகிய மாமரத்தை †மகபதி—இந்திரன். ‡வெம்மையார்காடு - மயானம்.

கணத்தொடு நடித்துக் °கராமக வுமிழப்
பணத்தகு §புலவன் பகர்தரு *முதற்பேர்
மெய்ப்படப் பெற்றோன் §விதுவார் நாளில்
உய்ப்பது பெற்றுன் உஞற்றும் பூசை
கொண்டவள் அருளாற் கொடுத்த மகவென
விண்டயர் கின்றேன்: வெறுத்தெனை விலக்கேல்!
செந்தில் ஏரகம் திருமலை முதலாம்
முந்தியற் கோயில் முழுமையும் அழுக்கா(று)
எய்தத் தகும்பே ரியற்கையொன் றெய்திய
புண்ணியக் குமார புரியில்
திண்ணிய வேல்கொடு திகழ்கிழ வோனே. 25

வெண்பா.

கிழவனுருக் கொண்டுகுறக் கிள்ளையிடம் சென்றுய்
மழலைமொழிச் சேயுருவில் வந்(து)ஆள் – அழகியபொற்
றோகைமயில் வீரா துகள்தீர் குமாரபுரி
வாகைவடி வேற்கையிறை வா. 26

*கட்டளைக்கலித்துறை.*

இறையள வேனும்நின் மெய்யன் பிலேன்எனை யேற்றுமனக்
குறைதவிர்த் தாளவும் வல்லாய்கொ லோதென் குமாரபுரி
நிறைதருஞ் சீரெய்த வந்தாய் தினமும் நினைப்பவரைப்
*பிறைமுடிக் கும்படி செய்வாய் எவர்க்கும் பெரியவனே. 27

*நிலைமண்டில ஆசிரியப்பா.*

§பெரியவர் நால்வர் பேணி யேத்த
அரியகல் லாற்கீழ் அமருங் குரவன்
பரவும்நிற் †பழிச்சும் பான்மை யேனை
விரவும்ஆ ணவநோய் வேரற முறுக்கி
*வடவரைப் புடைத்த வழுதி வலியும்
கடல்குடித் தான்றோன் கல்விப் பேறும்
சண்பையூர்ப் ‡புலவன் தனது மாண்பும்

---

25. °கரா-முதலை §புலவன்–சுந்தரமூர்த்தி நாயனர். *முதல்தருபேர்–பித்தா என்று பாடப்பெற்ற பரமன். §விதுஆர்நாள்–பௌர்ணமியில் அபிராமப் பட்டர் செய்த வழிபாட்டை ஏற்றவளான உமாதேவி, இவர்களது புதல்வனாக வந்தவன் நீ என்பதாகப் போற்றுகின்றேன் என்பதாம்

27. *பிறைமுடிக்கும்படி - பரமேசனைப்போல நித்திய வாழ்வடைந்து, சிவசாரூபமான சொருப சித்திபெறும்படி.

§விண்புரைந் துருப்போல் விளங்குங் §கவினும்
பெறக்கொடுத் தாண்டுன் பெய்கழற் றுணைத்தாள்
உறக்கொள்வான் ஒருசற் றுளமினி திரங்காய்!
வால்வளை முரலும் மலர்ப்பெரு வாவி
சால்வளம் பொலிந்து தமநிய நகரி
புரைதரு குமார புரியில்
தரைமுழு துய்யத் தரித்தகாங் கெயனே. 28

**வெண்பா.**

காங்கார் நிறத்தொருத்தி காதல்விஞ்சிக் கானவர்தம்
ஆங்காரம் குன்றுறச்செற் றுண்டானைத் – தீங்காளர்
போற்றுக் குமார புரியிற் பணியவல்லார்
ஏற்றுளன் சீர்பெறுவா ரே. 29

***கட்டளைக் கலித்துறை.***

பெறுவாருக் குண்மைப் பொருளோதும் ஞானப் பிரான்: பிறங்கும்
அறுமா முகத்தெந்தை ஐங்கரத் தான்றுணை, ஆன்றபுகழ்க்
குறுமா முனிக்கருள் கோமான் என்பார்கள் கொடியவரைக்
கறுவாண்மை யோங்குங் குமார புரியன்ன காரணரே. 30

முற்றிற்று

**நூற்பயன் – வெண்பா.**

***கொய்ம்மலர்த்தண் சோலைக் குமாரபுரிக் கோன்புனையும்
மும்மணிக் கோவை மொழிவார்க்கு – மைம்மருவு
வானகத்துத் தேவர் மருவாப் பெருவாழ்வும்
ஈனமற்ற வீடுமெய்து மே.***

**தெய்வமே துணை**



---

28. §பெரியவர் நால்வர் – சனகர், சனற்குமாரர், சனந்தரர், சநாதரர் என்ற முனிவர்கள். †பழிச்சும் – பாமனும் பணியும் ஆசானாகிய உன்னைப் பரவும் அடியேனை. *வடவரை – மகாமேருவைச் செண்டாலடித்த உக்கிரபாண்டியன். ||சண்பையூர்ப் புலவன் – ஞானசம்பந்தர். §விண் புரைந்து ...... கவின் – உருவமட்டும் தோன்றி வெளிமயமாயிருக்கும் சொருபசித்தி.

ஸ்ரீ

ஸ்ரீமந் நாராயணாய நம:



# திருமால் பதிகம்.

காப்பு – வெண்பா.

பொன்வாழ் குமார புரியிற். றிருமாலை
என்வாய்த் தமிழால் இயம்புதற்கு–மின்வாய்ந்த
வாளெடுத்துத் தூணைவெட்டு மாறொருசொற் சொன்னவன்பொற்
றுளெடுத்துக் கொள்ளுந் தலை.

நூல்

கொச்சகக் கலிப்பா.

விடையுகைப்போன் முதலோரை வேறெனக்கொண்(டு) உழலாதார்
நடையமைத்து நானிலத்தில் கலியளனை விடலாமோ?
படைவிடுத்துக் கதிர்மறைத்துப் பார்த்தனுய்யும் படிசெய்தாய்
குடையெனக்குன் றெடுத்திட்டாய் குமாரபுரித் திருமாலே. 1

அஞ்சலென நீயொருக்கால் அறைந்தமொழி யதுகேட்டு
நெஞ்சகமிப் படிவாடி நிலைகலங்கச் செயலாமோ
கஞ்சனெனும் மாபாவி கருணையின்றிச் செலவிட்ட
குஞ்சரக்கோ(டு) ஒடித்தோனே! குமாரபுரித் திருமாலே. 2

சக்கரஞ்சங் குடனோர்காற் றமியேன்நெஞ் சிடைதோன்றி
நக்கறைந்த வாறுலகும் நன்குணரும் தினம்யாதோ?
திக்கடங்க வுண்டுமிழ்ந்தும் தேவகிதன் மகவாகிக்
கொக்ககல்வாய் பிளந்தோனே! குமாரபுரித் திருமாலே. 3

நம்பறியாக் கள்வரொடு நானிலத்திற் றிரிவேனைக்
கம்பலைதீர்த் தாண்டருளிக் களிக்கடலும் விளைப்பாயோ?
செம்பவளத் திருமேனிச் சிவனாகி ஒருகாலங்
கும்பமுனிக் கருள்செய்தாய்! குமாரபுரித் திருமாலே. 4

மாடூரும் பெருமானும் மகவானும் வண்கமலத்(து)
ஏடூரும் நான்முகனும் எனைப்பகர்சீர் என்றருள்வாய்!
ஆடூரும் கனல்போலும் அடையலர்தம் படைமுற்றும்
கோடுதீ வெல்வானே குமாரபுரித் திருமாலே. 5

ஆபாசப் புலைத்தன்மை யதைத்தவிரா தளிகூர்வார்
பூபார மிகச்செய்தற் பொறுத்திருக்கை முறைதாறு
கபாலிக் கெளியோனே! கரத்தொளிர்ஐம் படையானே!
கோபாலா! போர்ஏறே! குமாரபுரித் திருமாலே! 6

கிள்ளைநிகர் மொழிமாதர் கேளிநலம் மிகநாடி
வெள்ளைமனம் தளர்தீமை விலக்கிஎனைப் புரந்தருள்வாய்
கள்ளைமலர் சொரிவாவிக் கரையிலுறும் கலையெல்லாம்
கொள்ளைகொண்டு களிகூர்வாய்! குமாரபுரித் திருமாலே· 7

பன்னிறைந்த வாய்முதலை பற்றவருள் பகடொன்றின்
முன்னிகழ்பேர் ஆடல்மிக மொழிவேனுக் கிரங்காயோ?
அன்னியம்ஒன் றில்லாமல் அனைத்திடத்தும் அவிர்வோனே!
கொன்னிலங்கு பூஞ்சோலைக் குமாரபுரித் திருமாலே. 8

தலையாய மந்திரத்தை தன்பெயரிற் றூழ்(வு)என்னும்
மலைநேர்வல் லிரணியனை வகிர்ந்தபுகழ் மறப்பேனே
இலையார்பைந் துளவமணி ஈரிருதோட் கார்முகிலே!
குலைவாழைச் சூழலுடைக் குமாரபுரித் திருமாலே: 9

வண்டமிழ்த்தென் குருகூரில் வருவானோர் பலர்வாழ்த்தும்
புண்டரிகத் திருத்தாள்என் புன்மொழிகள் புனையாதோ
அண்டமுழு துண்டுமிழும் அரக்காம்பல் வாய்முகுந்தா!
கொண்டல்வண்ணத் தம்மானே! குமாரபுரித் திருமாலே. 10

தொண்டதனைப் பகுத்தேசித் துகட்பட்டுச் சுழல்வோராம்
குண்டர்அறி வரியானைக் குமாரபுரித் திருமாலைத்
தண்டமிழ்ச்சீர் நெல்லைநகர் தனில்ஒருவன் பகர்பாடல்
விண்டலத்து வானவரும் விரும்புநலம் தருமன்றே. 11

*முற்றிற்று.*

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 9 | வெண்டனை | வெண்டளை |
| 2 | 8 | இருக்கும் | இறுக்கும் |
| 5 | 9 | களிப்பா | கலிப்பா |
| 6 | 13 | கூறுழ் | கூறும் |
| 8 | 15 | பாவை | பரவை |
| 15 | 1 | போலுண் | போலுன் |
| ,, | 2 | கலோ | கொலோ |
| ,, | 22 | காண | கான |
| ,, | 23 | பிடத்தும் | பிடந்தும் |
| 16 | 12 | முகியெதிர் | முகிலெதிர் |
| 21 | 16 | இசைவுரு | இசைவுறு |
| 22 | 7 | வைவே | கைவே |
| 25 | 2 | தைதயென் | தையென் |
| 29 | 15 | புகழக் | புகழ்க் |
| 31 | 2 | தாஞ | தாஞு |

## குமாரபுரி ஸ்ரீ சண்முக சுவாமிகள் மடத்திலுள்ள மூர்த்திகள் மீது இந்நூலாசிரியர் பாடியுள்ள பிறநூல்கள்.

(அச்சிடாதவை)

| | | | |
|---|---|---|---|
| 1 | திருவருள் விநாயகர் பதிகம் | 12 | பாடல் |
| 2 | கூத்தாடும் சிவன் பதிகம் | 12 | ,, |
| 3 | நடராசர் பதிகம் | 12 | ,, |
| 4 | நடராசர் வகுப்பு | 1 | ,, |
| 5 | சிவகாமசுந்தரி பதிகம் | 12 | ,, |
| 6 | சிவன் சந்தப்பண் பதிகம் | 12 | ,, |
| 7 | சிவன் பவனிப் பதிகம் | 12 | ,, |
| 8 | முருகன் பதிகம் | 13 | ,, |
| 9 | முருகன் திருப்புகழ் | 1 | ,, |
| 10 | கண்ணன் பதிகம் | 12 | ,, |
| 11 | விஷ்ணு பஞ்சாயுதத் திருப்புகழ் | 7 | ,, |
| 12 | சண்முக சுவாமி பதிகம் | 13 | ,, |
| 13 | சண்முக சுவாமி திருவுருக்கரந்த பதிகம் | 13 | ,, |
| 14 | சண்முக சுவாமி வகுப்பு | 1 | ,, |
| 15 | ஓரடிக்கீர்த்தனை | 1 | ,, |



ராஜேஸ்வரி பிரஸ். விழுப்புரம்-64.